# குறள்நெறி

-குறள்நெறி ஓங்கின் குடியரசு ஓங்கும்-

*மின்னிதழ்:79 மாசி-18--தி.பி.2055 மார்ச்சு-1-- பொ.ஆ.2024*

நிறுவுநர்: செந்தமிழ்மாமணி சி.இலக்குவனார்


## மாண்புமிகு தமிழ்நாட்டு முதலமைச்சர் தளபதியார் எழுபதாண்டு நிறைவுச் சிறப்பிதழ்



## மாண்புமிகு தமிழ்நாட்டு முதலவர் அவர்களுக்கு வாழ்த்துப் பா

## மலேசியாவின் முதுபெரும் தமிழறிஞர், பாவலர் முரசு நெடுமாறன் வாழ்த்துகிறார்

### உலகத் தமிழர் வாழ்த்துகிறார்

இன்று வையம் ஏறிட்டுப் பார்த்துநாம்
அன்று வாழ்ந்த அருமையை வியக்கும்!
இடையில் நிகழ்ந்த இடிசலால் தமிழர்
புலம்பெ யர்ந்தனர்; புவியெலாம் சிதறினர்!
அவர்களைத் தாயகம் அணைக்கமுன் வந்ததா?
எந்தத்தமிழர் ஏதேனும் செய்தனர்?
இருமுறை பெரியார் இங்கு வந்ததால்
பகுத்தறி விற்குப் பாதை திறந்தது!
அண்ணா வந்தார் அருந்தமிழ் உணர்வு
நெஞ்சில் பற்ற நிகழ்த்தினார் பேருரை!
அயலகத் தமிழர் ஆற்றல் பெருகப்
பாவேந்தர் விருதைப் பரிவுடன் அளித்து,
கலைஞர் புதுவழி காட்டிச் சென்றார்
அவர்தம் பிள்ளை அருமைத் தளபதி
முதல்வர் ஸ்டாலின் முழுமனத் தோடு
செய்துள செயல்கள் செப்பிடில் இனிக்கும்
விளைவுகள் உள்ளின் வியப்பு மேலிடும்!
தம்அமைச் சில்ஒரு தனிஅமைச் சாக
அயலக நலத்துறை அமைத்தது மட்டுமா?
அதன்வழி அவர்கள் ஆக்கும் செயல்களால்
உலகத் தமிழர் உவப்பில் மிதக்கிறார்
தகுதி யாளர் தரங்கண் டுவந்து
விருதுகள் பொற்கிழி விழைந்து வழங்கலால்
புத்தாக்கம் அவரில் பூக்கச் செய்கிறார்!
இதுவரை யாரும் இயற்றிடா இந்த
ஆக்கம்உலகத் தமிழர்க்குப் பெருங்கொடை!
எவரும் நிகழ்த்தாத இக்கொடை வழங்கும்
முதல்வர்க்குப் பிறந்தநாள்! உவந்தே
நீள வாழ நிகழ்த்துவோம் வாழ்த்தே!

26.02.2024 - முரசு நெடுமாறன்
மலேசியா




கலைஞர், பேராசிரியருடன் முரசுநெடுமாறன்

நம் இதழின் சிறப்பாசிரியர்களுள் ஒருவர். உலகப்புகழ்பெற்ற பாவலர். மலேசியாவின் முதுபெரும் இலக்கியப் படைப்பாளி. தமிழ்நாட்டு அரசால் முதன்முதலில் பாவேந்தர் விருது வழங்கிக் கலைஞர் அவர்களால் சிறப்புச் செய்யப்பட்ட முதல் அயலகத் தமிழர் என்னும் பெருமைக்குரியவர். மலேசிய வானொலியில் ஆயிரக்கணக்காகக் குழந்தைநாடகங்களை எழுதிக்குவித்த அருந்திறலாளர்.முன்னூறு ஆண்டுகள் வரலாறு படைத்த மலேசியத் தமிழ்க்கவிதைகளைத் தேடித் தொகுத்து “மலேசியத் தமிழ்க் கவிதைக்களஞ்சியம்” என்னும் பெருந்தொகுப்பை உருவாக்கி வெளியிட்ட பெருமைமிகு அருஞ்செயலாளர். மலேசிய அரசும்,மலேசிய ஊடகங்களும் இவரது பணியைப் பன்முறை பாராட்டியுள்ளன.

# சிங்கப்பூரின் மூத்த தமிழ்ப் பேராசிரியர் வாழ்த்து

## அறிஞர் சுப.திண்ணப்பன் வாழ்த்துகிறார்.

மாண்புமிகு தமிழ்நாட்டு முதலமைச்சர் தளபதியார் தமிழுக்கு ஆற்றியிருக்கும் தொண்டும் ,ஆற்றிவரும் தொண்டும் அளப்பரியவை.

ஏற்கெனவே கலைஞர் அவர்களின் தலைமையில் துணை முதலமைச்சராகப் பொறுப்பேற்றிருந்த வேளையில் உலகத் தமிழ்ச் செம்மொழி மாநாட்டை மிகச் சிறப்பாக நடத்தி உலகளாவிய அறிஞர்களின் கவனத்தைத் தமிழ்மொழி ஆராய்ச்சியின் பக்கம் ஈர்த்தார்.அம் மாநாடு அனைவரும் போற்றத்தக்க வகையில் செம்மொழித் தமிழுக்கு உலக அரங்கில் சிறப்பிடம் பெற்றுத் தந்தது. தமிழினமே மகிழ்ந்து கொண்டாடும் வகையில் அவர் முதலமைச்சராகப் பதவியேற்றபின்னர் அயலகத் தமிழர்களுக்குத் தமிழ்நாட்டு அரசு ஆக்கமும் பயனும் விளைவிக்கும் வகையில் பல உதவிகளைச் செய்வதற்காகவே அயலகத் தமிழர் நலன் மேம்பாட்டுக்கு ஒரு துறை ஏற்படுத்திச் செயல்துடிப்பு வாய்ந்த ஓர் அமைச்சரைப் பணியில் அமர்த்திச் சிறந்த பல திட்டங்களை நிறைவேற்றிவருகிறார்.ஆண்டுக்கு ஒருமுறை உலகெங்கும் வாழும் புலம்பெயர்தமிழர்களை அழைத்து அவர்களின் பல்வேறு ஆய்வுரைகளைக் கேட்டறிந்து பொருளாதாரம்,தொழில்,வணிகம் ஆகிய துறைகளில் தமிழ்நாட்டுக்கு ஆக்கம் அளிக்கும் வகையில் அந்தச் சந்திப்பைப் பயன்கொண்டும் புலம்பெயர் தமிழர்களுக்கு ஏற்படும் சிக்கல்களைக் களைதற்கு உதவி புரிந்தும் வருகிறார்.தமிழ்மொழிக்குத் தொண்டாற்றிவரும் அயலகத் தமிழறிஞர்களுக்கும் அயலகத் தமிழ்க்கவிஞர்களுக்கும் படைப்பாளர்களுக்கும் விருதுகளும் பாராட்டும் வழங்கிவருகிறார்.தாய்வீட்டுச் சீதனமாக இந்தப் பாராட்டுகளும் பரிசுகளும் புலம்பெயர்தமிழர்களுக்குப் பெரிதும் ஊக்கமளித்து வருகின்றன. சென்ற ஆண்டு எனக்குக் "கணியன் பூங்குன்றனார் விருது" வழங்கிச் சிறப்பித்தார்.முதல்வர் தமது சிங்கப்பூர் வருகையின்போது பல்வேறு அலுவல்நெருக்கடிகளுக்கிடையில் நேரம் ஒதுக்கி என்னைச் சந்தித்து அரைமணிநேரம் கலந்துரையாடினார். பொன்னாடை போர்த்தித் தமது அன்பை வெளிப்படுத்தினார்.

தாயன்பும் தமிழுள்ளமும் கொண்ட நமது தமிழ்நாட்டு முதலமைச்சர் அவர்களின் எழுபதாண்டு நிறைவுவிழா மிகச் சிறப்பாக நடைபெற என் வாழ்த்துக்கள்.



மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் திரு. மு.க. ஸ்டாலின் அவர்கள் இன்று (25.05.2023) சிங்கப்பூரில், சிங்கப்பூர் வாழ் தமிழர் முனைவர் சுப.திண்ணப்பன் அவர்கள் தமிழ் சமுதாயத்திற்கு ஆற்றிய சேவைகளைப் பாராட்டி அவருக்கு சால்வை அணிவித்து, புத்தகம் வழங்கி சிறப்பு செய்தார்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் பணிபுரிந்த இவர் மலாயாப் பல்கலைக் கழகத்தின் இந்திய ஆய்வுப் பிரிவில் விரிவுரையாளராகவும் பணியாற்றினார். சிங்கப்பூர்க் கல்விக் கழகத் தமிழ்த்துறைத் தலைவராகவும் தேசிய தொழில்நுட்ப பல்கலைக் கழகத்தின் கலைப் பள்ளியில் இணைப் பேராசிரியராகவும், சிங்கப்பூர் தேசியப் பல்கலைக்கழகத்தின் தெற்காசியக் கல்வித் திட்டப் பகுதி நேரப் பணியாளராகவும், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம், லண்டன் கீழ்த்திசை ஆப்பிரிக்க ஆய்வு நிலையம் ஆகியவற்றிலும் இன்னும் பல்வேறு பல்கலைக்கழகங்களிலும் வருகைதரு பேராசிரியராகப் பணியாற்றியுள்ளார். சிங்கப்பூரில் மூத்த தமிழறிஞர்.

## ஈழத்திலிருந்து ஓர் இனிய

**கவிஞர் அழ.பகீரதன்**, பொருளாளர், மறுமலர்ச்சி மன்றம்,காலையடி, பண்டத்தரிப்பு.

தமிழ்கூறு நல்லுலகு எங்கும்நிறை தமிழர்
செறிந்து வாழ்ந்திட ஏற்றம்பெற எனவே
அயலகத் தமிழர் அன்புறு முதலமைச்சராய்
தேயமெங்கும் போற்ற என்றும் வாழ்வீர்!
எழுபது ஆண்டுகள் எழிலுறு ஸ்ராலின்
தொழுதிடு வண்ணம் தொய்வுறாப் பணியில்
விழுதெனத் திகழப் பழுதில் வகையில்
பொழுதெலாந் தமிழர் நலனென வாழ்வீர்!
நற்றிட்டம் தீட்டி புலம்பெயர் தமிழர்
பெற்றிடு பயன்கள் பலவென எழுந்திட
வற்றிடு எம்நிலையில் கரம்நீட்டிடு பணியில்
அற்புதம் நும்பணி பொற்புற வாழ்வீர்!
உறுபசி தீர்த்திட இனமத பேதமிலாத
உளத்த னாகியே ஈழத்தவர் பெற்றிட
தெப்பம் நிறைய பொதிகள் அனுப்பிய
செப்பம் மிகுசீர் திகழ்ந்திட வாழ்வீர்!
ஏதிலியாய் வந்தார் ஏற்றம்மிகப் பெறப்
போதிலா நிலையிலே நலத் திட்டமொடு
மேதினியில் செறிந்து வாழ்ந்திடச் செய்திடும்
தீதிலாச் சிறப்பொடு தீர்க்கமாய் வாழ்வீர்!
அகழ்வாய்வு திகழ்நூலக அயலக விருதென
நிகழ்த்திடு கணித்தமிழ் மாநாடு நூற்பதிப்பென
மிகப்பல ஏற்றமிகு செறிவான வழிப்படுத்தலில்
செகமதில் நாட்டும் புகழொடு வாழ்வீர்
அழ.பகீரதன், செருக்கப்புலம், சுழிபுரம், இலங்கை.





சுழிபுரம் முருகன்

தவத்திரு தயானந்த சந்திரசேகர சுவாமிகள்
ஆதீன குருமகா சந்நிதானம்



திலகவதியார் திருவருள் ஆதீனம்,
email:sivabrindadevi@gmail.com

அன்னைத் தமிழ்நாட்டின் முதலமைச்சர் மாண்புமிகு திரு.மு.க.ஸ்டாலின் அவர்கள் வரும்2024, மார்சு, 1 ஆம் நாள், எழுபதாம் ஆண்டு அகவை நிறைவை காணும் வேளையில் தகைசால் அவருக்கு நமது உளம் நிறைந்த நல்லாசிகளை வழங்கி மகிழ்கிறோம்.

வளரிளம் பருவத்திலேயே கட்சிப்பணிகளிலும், மக்கள் பணிகளிலும் ஈடுபட்டு அயராத தம் உழைப்பால் கட்சியிலும். அதன் பயனாக மேயராக, சட்டமன்ற உறுப்பினராக, அமைச்சராக, துணை முதல்வராக, ஆற்றல்மிகு எதிர்கட்சித்தலைவராக பல்வேறு பரிமாணங்களையும், அனுபவங்களையும் பெற்ற தீரராக விளங்கி நாட்டை திறம்பட ஆட்சி செய்து வருபவர் நமது தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள்.

இன்றைய இந்திய அரசில் சூழ்நிலையில், மொழிக் கொள்கை, சமூக நீதி, சமத்துவம், மாநில சுயாட்சி,ஒன்றியத்தில் கூட்டாட்சி, அனைத்தும் அனைவருக்கும் என்ற கொண்ட கொள்கையோடும், நம்பிக்கதையோடும், முதலமைச்சர் எனும் பொறுப்பில் மாண்புமிகு முதலமைச்சர் ஆற்றி வருகின்ற அரும்பணிகளை நாடறியும். நாமும் அறிவோம். நிகழ்காலத்திற்கு மட்டுமல்ல, வருங்காலத்திற்கும், அடுத்ததடுத்த வருகின்ற சந்ததியினருக்கும் பயனும் பலனும் அளிக்கும் மகத்தான திட்டங்களை செயல்படுத்தி வருகின்ற தொலைநோக்கு மிக்க மக்கள் தலைவராக விளங்கி வருகிறார் நமது முதலமைச்சர். கல்வி ஒன்றுதான் மனித சமுதாயத்தை நல்வழிப்படுத்தி உருவாக்கும் என்ற உயர் சிந்தனையோடு மாணவ,மாணவிகளை பள்ளிக்கு ஈர்க்கும் அற்புதமான காலை உணவுத் திட்டம். நான் முதல்வன் திட்டம், அரசு பள்ளியில் பயிலும் மகளிருக்கு மாதம் ரூ. 1000 வழங்கும் திட்டம், திருநங்கைகளுக்கு கல்லூரி படிப்பிற்கான பொறுப்பை அரசு ஏற்கும் என்ற திட்டம், மகளிருக்கு இலவச பேருந்து கட்டணம், மகளிருக்கு மாதம் ரூ.1000 வழங்கி வருதல், அதுமட்டுமல்லாமல், விளையாட்டுத்துறைக்கு தனி கவனம் செலுத்தி வருதல், தொழில்துறையின் முன்னோடி மாநிலமாக மாற்றும் முயற்சி, தொல்லியல் துறையினை கவனத்தை ஈர்க்கும் துறையாக புதுமைப்படுத்தி, அகழ்வராய்ச்சிகளை தொடர்தல் அதனை முறையாக ஆவணப்படுத்துதல், தமிழ்மொழியிலுள்ள இலக்கியங்களை உலக மொழிகளில் மொழி பெயர்த்தல், தமிழறிஞர்களை போற்றி அறிஞர்பெருமக்கள் பெயரில் விருதுகளை வழங்கி வருதல், கலைஞர் நூற்றாண்டை முன்னிட்டு முக்கிய நகரங்களில் பெரிய அளவில் நவீன நூலகங்களை அமைத்து வருதல் என ஒவ்வொரு துறையிலும் கவனம் செலுத்தி, நாடும். மக்களும் உயரத் திட்டங்கள் தீட்டி அமல்படுத்தி வருவது மாபெரும் சாதனை என்றே சொல்ல வேண்டும். நமது ஒன்றியரசின் பாராமுகம், கடும் நிதி நெருக்கடியிலும் இத்தனை மகத்தான திட்டங்களை செயல்படுத்தும் திறனை அறிந்து மிகவும் பெருமை கொள்கிறோம்.

காலத்தின் கொடையாக தமிழ்நாட்டின் முதலமைச்சராக இவர் பொறுப்பேற்றது தமிழர்கள் பெற்ற பேறாகும். இந்தியாவின் தலைசிறந்த மாநிலமாகவும், முதல் மாநிலமாக உயர்த்தவும், தமிழ் மக்கள் அனைத்திலும் சிறந்து ஓங்கி வளரவும் உழைத்து வரும் மாண்புமிகு முதலமைச்சர் திரு.மு.க.ஸ்டாலின் அவர்கள் பல்லாண்டு நலமோடு வாழ்ந்து இம்மண்ணிற்கும், நாட்டிற்கும் சேவையாற்றிட எல்லாம் வல்ல சிவபரம்பொருளையும், ஆதீன அன்னையின் குருவருளையும் நீள நினைந்து வாழ்த்துகிறோம்.

என்றும் சமய, சமுதாயச் சேவையில்,

25.2.2024

தவத்திரு தயானந்த சந்திரசேகர சுவாமிகள்
ஆதீன குருமகா சந்நிதானம்

திலகவதியார் திருவருள் ஆதீனம்,
120/5, [illegible],
[illegible], புதுக்கோட்டை - 622 001
கைபேசி: 97868 52525
email:sivabrindadevi@gmail.com

நாள்: 25.2.2024

**வாழ்த்துச் செய்தி**

அன்னைத் தமிழ்நாட்டின் முதலமைச்சர் **மாண்புமிகு திரு. மு. க. ஸ்டாலின்** அவர்கள் வரும் 2024, மார்ச் 1ஆம் நாள், எழுபதாம் ஆண்டு அகவை நிறைவை காணும் வேளையில் [illegible] அவருக்கு நமது உளம் நிறைந்த நல்லாசிகளை வழங்கி மகிழ்கிறோம்.

மாணவர் பருவத்திலேயே கட்சிப் பணிகளிலும், மக்கள் பணிகளிலும் ஈடுபட்டு அயராத தம் உழைப்பால் கட்சியிலும், அதன் [illegible] மேயராக, சட்டமன்ற உறுப்பினராக, அமைச்சராக, துணை முதல்வராக, ஆற்றல்மிகு எதிர்க்கட்சித் தலைவராக பல்வேறு பரிமாணங்களையும், அனுபவங்களையும் பெற்ற தீரராக விளங்கி நாட்டை திறம்பட ஆட்சி செய்து வருபவர் நமது தமிழ்நாட்டு முதலமைச்சர் அவர்கள்.

இன்றைய இந்திய அரசியல் சூழ்நிலையில், மொழிக் கொள்கை, சமூக நீதி, சமத்துவம், மாநில சுயாட்சி, ஒன்றியத்தில் கூட்டாட்சி, அனைத்தும் அனைவருக்கும் என்ற கொள்கையோடும், நம்பிக்கையோடும், முதலமைச்சர் எனும் பொறுப்பில் மாண்புமிகு முதலமைச்சர் ஆற்றி வருகின்ற அரும் பணிகளை நாடறியும். நாமும் அறிவோம்.

நிகழ்காலத்திற்கு மட்டுமல்ல, வருங்காலத்திற்கும், அடுத்தடுத்த வருகின்ற சந்ததியினருக்கும் பயனும் பலனும் அளிக்கும் மகத்தான திட்டங்களை செயல்படுத்தி வருகின்ற தொலைநோக்கு மிக்க மக்கள் தலைவராக விளங்கி வருகிறார் நமது முதலமைச்சர். கல்வி ஒன்றுதான் மனித சமுதாயத்தை நல்வழிப்படுத்தி உருவாக்கும் என்ற உயர் சிந்தனையோடு மாணவ,மாணவிகளை [illegible] அற்புதமான காலை உணவுத் திட்டம், நான் முதல்வன் திட்டம், அரசு பள்ளியில் பயிலும் மகளிருக்கு மாதம் ரூ. 1000 வழங்கும் திட்டம், திருநங்கைகளுக்கு கல்லூரி படிப்பிற்கான பொறுப்பை அரசு ஏற்கும் என்ற திட்டம், மகளிருக்கு இலவச பேருந்து பயணம், மகளிருக்கு மாதம் ரூ.1000 வழங்கி வருதல், அதுமட்டுமல்லாமல், விளையாட்டுத்துறைக்கு தனி கவனம் செலுத்தி வருதல், தொழில்துறையின் முன்னோடி மாநிலமாக மாற்றும் முயற்சி, தொல்லியல் துறையினை கவனத்தை ஈர்க்கும் துறையாக புதுமைப்படுத்தி, அகழ்வாராய்ச்சிகளை தொடர்ந்து [illegible] முறையாக ஆவணப்படுத்துதல், தமிழ்மொழியிலுள்ள இலக்கியங்களை உலக மொழிகளில் மொழி பெயர்த்தல், தமிழறிஞர்களை போற்றி அறிஞர் பெருமக்கள் பெயரில் விருதுகளை வழங்கி வருதல், கலைஞர் நூற்றாண்டை முன்னிட்டு முக்கிய நகரங்களில் பெரிய அளவில் நூலகங்களை அமைத்து வருதல் என ஒவ்வொரு துறையிலும் கவனம் செலுத்தி, நாடும், மக்களும் உயர திட்டங்கள் தீட்டி அமல்படுத்தி வருவது மாபெரும் சாதனை என்றே சொல்ல வேண்டும். நமது ஒன்றிய அரசின் பாராமுகம், கடும் நிதி நெருக்கடியிலும் இத்தனை மகத்தான திட்டங்களை செயல்படுத்தும் திறமை அறிந்து மிகவும் பெருமை கொள்கிறோம்.

காலத்தின் கொடையாக தமிழ்நாட்டின் முதலமைச்சராக இவர் பொறுப்பேற்றது தமிழர்கள் பெற்ற பேறாகும்.

இந்தியாவின் தலைசிறந்த மாநிலமாகவும், முதல் மாநிலமாக உயர்த்தவும், தமிழ் மக்கள் அனைத்திலும் சிறந்து ஓங்கி வளரவும் உழைத்து வரும் **மாண்புமிகு முதலமைச்சர் திரு.மு.க.ஸ்டாலின்** அவர்கள் பல்லாண்டு நலமோடு வாழ்ந்து இம்மண்ணிற்கும், நாட்டிற்கும் சேவையாற்றிட எல்லாம் வல்ல சிவபரம்பொருளையும், ஆதீன அன்னையின் திருவருளையும் நினைந்து வாழ்த்துகிறோம். வாழ்க.

மாண்புமிகு முதலமைச்சர் அவர்களின் பிறந்தநாளை **குறள் நெறி இணையத்திங்கள் இதழ்** மூலமாக பார் முழுதும் உள்ள சான்றோர்களிடத்து குறிப்பாக தமிழ்ச்சான்றோர்களிடத்து வாழ்த்துக்களை பெற்று சிறப்பிதழாக வெளியிடும் இவ்விதழின் பொறுப்பாசிரியரும், பேராசிரியர் பெருமகனாக விளங்கும் மறைமலை இலக்குவனார் ஐயா அவர்களுக்கும் நமது உளம் நிறைந்த பாராட்டுக்கள்.

என்றும் சமய, சமுதாயச் சேவையில்,

25.2.2024



மாண்புமிகு தமிழ்நாட்டு முதலமைச்சர் புதுக்கோட்டை திலகவதியார் திருவருள் ஆதீனகர்த்தர் தவத்திரு தயானந்த சந்திரசேகர சுவாமிகளுடன்
[தளபதியார் எழுபதாண்டு நிறைவையொட்டி அடிகளார் அனுப்பிய வாழ்த்துமடல் படத்தில்]

நலமுயர்ந்து மாநிலத்தார் நல்வாழ்வு வாழ,
புலம்பெயர்ந்த நம்மோர் புலம்பலொலி ஓயக்
குடிதழீஇக் கோலோச்சும் மாநில முதல்வர்
அடிதழீஇ நிற்கும் உலகு.

'கவி ஞாயிறு' துரை.தனபாலன்
தலைவர், தமிழ் ழகர மன்றம், சென்னை.





# Periyar International USA

5652 Chapel Hill Court, Gurnee, Illinois - 60031, USA
email: president@periyarinternational.org | phone: +1 (708) 361 1998 | Web: http://periyarinternational.com

President:
Dr. Soma Ilangovan

Secretary:
V.J. Babu

Treasurer:
Arulselvi Veeramani

*Mar 01, 2024*

## வாழிய வாழியவே!



பெரியாருக்குப் பின் தி.க.,
அறிஞர் அண்ணாவிற்குப் பின் தி.மு.க.
கலைஞருக்குப் பின் கழகம்
இருக்காதென்றே ஆருடம் சொன்னோர்
மூக்கில் விரல் வைத்தே
முனகுகின்றார் இன்றே!

தமிழரின் பொற்காலம்
தளபதி தலைமையிலே!
கனவெல்லாம் நனவாகும்
திராவிட மாடல் ஆட்சியென்றே
தரணி புகழ்ந்திடவே தந்திடுவார்
இவர் என்று சங்கு முழங்கிடவே
தமிழர் வாழ்வும் தமிழர் வளமும்
பொங்கி மகிழ்ந்திட வாழ்த்துவோம்!

முத்துவேல் கருணாநிதி ஸ்டாலின்
பொற்காலம் கண்டிடுவாய்!
கனவுகள் நனவாகும்
உழைப்பால் உயர்ந்தாய் நீ!!
உழைக்கின்றாய் அயராது
உலகெங்கும் வாழும் தமிழர்
வாழ்த்துகின்றோம்!!!
வாழ்வாய் பல்லாண்டு
படைத்திடுவாய் வரலாறு
வாழிய வாழியவே!!!!

- சோம. இளங்கோவன்
தலைவர், பெரியார் பன்னாட்டமைப்பு அமெரிக்கா.



திராவிட மாடல் ஆட்சியென்றே
தரணி புகழ்ந்திடவே தந்திடுவார்
இவர் என்று சங்கு முழங்கிடவே
தமிழர் வாழ்வும் தமிழர் வளமும்
பொங்கி மகிழ்ந்திட வாழ்த்துவோம்
முத்துவேல் கருணாநிதி ஸ்டாலின்
பொற்காலம் கண்டிடுவாய்
கனவுகள் நனவாகும்
உழைப்பால் உயர்ந்தாய் நீ
உழைக்கின்றாய் அயராது
உலகெங்கும் வாழும் தமிழர்
வாழ்த்துகின்றோம்
வாழ்வாய் பல்லாண்டு
படைத்திடுவாய் வரலாறு
வாழிய வாழியவே !

- சோம. இளங்கோவன்
பெரியார் பன்னாட்டமைப்பு அமெரிக்கா

மருத்துவர் ஐயா என்றே மனங்குளிர அழைத்து மகிழ்வோம்
சோம.இளங்கோவன் சொக்கத்தங்கம் இவர் பண்பில்!
இராமசாமிப் பல்கலைக்கழகத்தின் வாழ்நாள் மாணாக்கர்!
பகுத்தறிவுப் பாசறையின் பட்டறை வார்ப்பு!
உடல்நோய் தீர்க்கும் மருத்துவத் தொண்டும்
சமூக நோய் போக்கும் அறிவியக்கப் பணியும்
அலுப்பும் சலிப்பும் தராத அன்றாடப் பணியெனவே
அரைநூற்றாண்டாக உழைத்து வருபவர்;
அமெரிக்கப் பெரியார் பன்னாட்டமைப்பு-
அறிவொளி பரப்பிட இந்த அலாவுதீன் வழங்கிய
அற்புத விளக்கு; உடலும் பொருளும் உழைப்பும்
அனைத்தும் பெரியாரியப் பரப்புரைக்கே என
உழைத்துவரும் இவர் வாழ்த்து தமிழருக்கே
வலிமை சேர்க்கும்!வாழிய மருத்துவரையா!

# ஜெயா மாறன்

## தமிழாசிரியர்




**26** பிப்ரவரி **2024**

ஆசிரியர்
மேரியாட்டா தமிழ்ப்பள்ளி
அட்லாண்டா, அமெரிக்கா

மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களுக்கு,

அயலகத் தமிழர்கள் தாங்கள் குடிபெயர்ந்த நாடுக்ளில் குடியுரிமை பெற்றாலும் அந்நியராகவே நடத்தப்படுகின்றனர். தாயகத்தை விட்டு வந்ததால் அங்கும் அந்நியராகவே பார்க்கப்படும் நிலை இருக்கிறது. இந்த நிலையில் அயலகத் தமிழர் நலன் மற்றும் மறுவாழ்வுத் துறையின் கீழ், புலம்பெயர் நாடுகளில் சிக்கலான சூழ்நிலைகள் வரும் பொழுது எங்களை மீட்டுத் தாயகத்திற்குக் கொண்டு வருவது, அயலகத்தில் உயிரிழப்பவரின் குடும்பங்களுக்கு நிதியுதவி அளிப்பது, தமிழ் இணையப் பல்கலைக்கழகத்தின் மூலம் தாய் மொழி தமிழைப் பயிற்றுவிப்பது, அயலகத் தமிழர் நாள் கொண்டாடுவதன் மூலம் பல்வேறு நாடுகளில் உள்ள தமிழ் ஆர்வலர்களை இணைப்பது போன்ற பல்வேறு நலத் திட்டங்களைச் செயல்படுத்தி வரும் தங்களுக்கு, அயலகத் தமிழ்ப்பள்ளியின் ஆசிரியர் என்ற முறையில் அமெரிக்காவின் ஜார்ஜியா மாகாணத்தில் உள்ள மேரியாட்டா நகரில் கடந்த 15 ஆண்டுகளாக சிறப்பாக நடந்துவரும் எங்கள் மேரியாட்டா தமிழ்ப் பள்ளியின் சார்பாக எங்களுடைய நெஞ்சார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

என்றும் அன்புடன்
ஜெயா மாறன்



திருமதி.ஜெயா மாறன்-வலையரங்கத்தில் நற்றமிழ் முழக்கம் புரிந்துவரும் நாவுக்கரசி;அமெரிக்காவில் வாழும் தமிழர்களின் பிள்ளைகளுக்குத் தமிழ் பயிற்றும் தமிழாசிரியர்களுள் ஒருவர்;அமெரிக்கத் தமிழாசிரியர்கள் சார்பாகத் தமிழ்நாட்டு முதலமைச்சருக்கு இவர் வாழ்த்து நன்றியின் வெளிப்பாடு; ஆர்வார்டு பல்கலைக்கழகம் முதலாகப் பல அமெரிக்கப் பல்கலைக்கழகங்களில் தமிழ்ப்பாடம் இடம்பெறத் துணைநல்கிய முதல்வருக்கு இவர் வாழ்த்து பொருள்பொதிந்தது;பொருத்தமானது.

**கலைஞர் நினைவிடம்** ஒரு காட்சிக் கருவூலம்!




இக்காலத் தமிழ்நாட்டை எழிலுறச் செதுக்கிப்
பொற்காலம் மலரச் செய்த சிற்பி கலைஞருக்கு
வங்கக் கடற்கரையில் அவர் நினைவு தங்கக்
கோயில் நிறுவிக் கொலுவிருக்கச் செய்துள்ளார்
மாண்புமிகு தமிழ்நாட்டு முதலமைச்சர் தளபதியார்!
காணொளி வெள்ளித்திரைக்
கலைநுணுக்கங்கள் நிறைந்த
**கலைஞர் நினைவிடம்** ஒரு காட்சிக் கருவூலம்!
சின்னஞ்சிறு திரையரங்கும் சீர்மிகு நூலகமும்
காண்பவர் அனைவரின் உள்ளங்களிலும்
அலை அலையாய் அவர் நினைவை
ஆர்ப்பரித்து எழச்செய்யும் விந்தை என்னே!
போதிமரப் புத்தனும் காஞ்சிநகர் அத்தனும்
சேர்ந்ததுபோல் தோற்றத்தில் நம் கலைஞர்!
வெண்கலச் சிலையென்கிறார்கள்! இல்லை!
நம் இதயங்களின் படிமம்! உள்ளங்களின் வடிவம்!
செம்மொழித் தகுநிலை நம்மொழி பெறவே
முனைந்த நன்முயற்சியைப் பாராட்டி
அன்னை சோனியா அன்றெழுதிய கடிதம்
ஆங்கிலத்திலும் தமிழிலும் அங்கே காணலாம்!



உதயசூரியன் வடிவில் நம் இதயசூரியன் கலைஞர்
ஒளிவடிவாய்ப் பின்புலமாய்க் கண்ணுக்கு விருந்து!
அறிவியல் வளர்ச்சி அளித்த கொடையாய்
எண்ம அருங்காட்சியகம்! கலைஞர் உலகம்!
'கலைஞரின் எழிலோவியங்கள்' !
புகைப்படத் தொகுப்பா? அல்லவே அல்ல!
அருங்காட்சியகத்தின் அகத்திலும் புறத்திலும்
வாழ்வியல் வார்ப்படம்!நிகழ்வுகளின் ஊர்வலம்!



பிறப்பும் வளர்ப்பும் பெருமிதச் சிறப்பும்
போராட்ட மாண்பும் பொதுவாழ்வுக் காட்சிகளும்
அப்படியே கலைஞரை அருகில் வைத்துக்
காட்டும் அற்புதத்தைப் போற்றலாம்!
'கலைஞருடன் ஒரு செல்பி' அரங்கம்!
'தற்சுட்டி'ஆர்வலர்க்கோர் அருங்கொடை!

கோபாலபுரம் இல்லத்தில் அமர்ந்திருக்கும் கலைஞர்!
அங்கே 'தற்சுட்டி' (செல்பி ) எடுத்துக் கொள்ளலாம்!
கட்செவி (வாட்சு அப்) வழியே
நம் கைப்பேசியில் வரும்!
'கலைஞரின் சிந்தனை' என்னும் அறையில்
'நெஞ்சுக்கு நீதி' உள்ளிட்ட எட்டுப் புத்தகங்களுடன்
எண்மத் (டிஜிட்டல்) திரை அமைக்கப்பட்டுள்ளது.
எந்தப் புத்தகத்தைத் தொட்டாலும் அதன் விளக்கம்
காணொளியாகத் (வீடியோவாக ) தோன்றுகிறது.
சரித்திர நாயகனின் சாதனைப் பயணம்!
இந்தப் பெயர்தாங்கிய அறையில் நுழைந்தவுடன்
திருவாரூர் முதல் சென்னை வரை
தொடரியில் (இரயிலில்) பயணிப்பது போன்ற
உணர்வை ஏற்படுத்தும் அறிவியல் விந்தை!.
தஞ்சை, திருச்சி, மதுரை உள்ளிட்ட
இரயில் நிலையங்களைக் கடக்கும் போது
அந்தந்த ஊர்களில் கலைஞரின் வாழ்க்கையில்
தொடர்புடைய நிகழ்வுகள் காட்சிகளாகத் தோன்றி
விந்தை மிக்க அனுபவத்தை ஏற்படுத்தும்.
சின்னஞ்சிறு திரையரங்கம் சென்றால்
'கலையும் அரசியலும்' என்ற தலைப்பில்
கலைஞரின் வாழ்க்கை வரலாற்றுக் குறும்படம்!
அடடே! உள்ளே நுழைந்து வெளியே வரும்
ஒவ்வொருவரும் கலைஞர் பெருமகனைக்
கண்டும் கேட்டும் வரும் ஒப்பற்ற வாய்ப்பு!
மாண்புமிகு முதல்வர் தளபதியாரின்
ஒப்பற்ற தலைமையில்
ஓய்வில்லா உழைப்பால்
எத்துணைக் கணினி வல்லுநர்கள்
திரைநுணுக்க மேதைகள்
இலக்கிய அறிஞர்கள்
வரலாற்று வல்லுநர்கள்
தொழில்நுணுக்கப் பொறியாளர்கள்
அரும்பெரும் உழைப்பால் ஆக்கிவைத்த கலையரங்கம்!
அத்துணைப் பேருக்கும் பணிவான வணக்கங்கள்!
-------மறைமலை இலக்குவனார்






